# ப்ரஹ்ம-ஜ்ஞானாவளீ மாலா

[ப்ரஹ்ம ஞானாபவமுள்ளவர்கள் தமது அனுபவத்தை ஒருவாறு வெளியிட்டுக் காட்டும் சொற்களின் வரிசை அடங்கியது 'ப்ரஹ்ம ஜ்ஞாநாவளீ' மாலை.]

**ஸக்ருத் ச்ரவண மாத்ரேண ப்ரஹ்மஜ்ஞாநம் யதோ ப⁴வேத் ।**
**ப்ரஹ்ம-ஜ்ஞாநாவளீ மாலா ஸர்வேஷாம் மோக்ஷஸித்³த⁴யே ॥** 1

ஒரு தடவை சிரவணம் செய்தமாத்திரத்திலேயே எதனால் ப்ரஹ்ம ஞானம் ஏற்படுமோ (அந்த) " ப்ரஹ்மஞா நாவளீ மாலை'1 என்ற நூல் எல்லோருக்கும் மோக்ஷம் ஏற்படுவதற்கு (உபயோகமாக) ஆகிறது.

**அஸங்கோ³(அ)ஹ-மஸங்கோ³(அ)ஹ-மஸங்கோ³(அ)ஹம் புந: புந: ।**
**ஸச்சிதா³நந்த³ ரூபோ(அ)ஹ-மஹமேவாஹ-மவ்யய: ॥** 2

நான் பற்று இல்லாதவன். நான் பற்று இல்லாதவன். எவ்விதத்திலும் நான் பற்றில்லாதவன். நான் ஸத்தியம், ஞானம், ஆனந்தம், இவற்றை ஸ்வரூப மாகக் கொண்டவன். நான் அழிவற்ற நான் தான். (சுத்த ஆத்மஸ்வரூபமே.)

**நித்யசுத்³த⁴ விமுக்தோ(அ)ஹம் நிராகாரோ(அ)ஹ-மவ்யய: ।**
**பூ⁴மாநந்த³-ஸ்வரூபோ(அ)ஹ-மஹமேவாஹ-மவ்யய: ॥** 3

நான் நித்யனாயும், தோஷமற்றவனாயும், (அல்லது எப்பொழுதும் சுத்தனாயும்) விடுபட்டவனாயும் இருக்கிறேன். நான் உருவமற்றவன். குறைவுபடாதவன. நான் மிகப்பெரிய ஆனந்த ஸ்வரூபன். நான் அழிவற்ற நான் தான்.

**நித்யோ(அ)ஹம் நிரவத்³யோ(அ)ஹம் நிராகாரோ(அ)ஹ-மச்யுத: ।**
**பரமாநந்த ரூபோ(அ)ஹ-மஹமேவாஹமவ்யய: ॥** 4

நான் நாசமில்லாதவன், நான் எல்லையில்லாதவன், நான் வடிவமற்றவன், நழுவாதவன் (ஸ்திரமானவன்). நான் மேலான ஆனந்தஸ்வரூபன். நான் நாசமற்ற நான் தான்.

**சுத்³த⁴சைதந்ய-ரூபோ(அ)ஹ-மாத்மாராமோ(அ)ஹ-மேவ ச ।**
**அக²ண்டா³நந்த³-ரூபோ(அ)ஹ-மஹமேவாஹ-மவ்யய: ॥** 5

நான் சுத்தமான (ஒன்றிலும்) ஸம்பந்தப்படாத சைதன்ய ஸ்வரூபன். நான் ஆத்மஸ்வரூபம் ஒன்றிலேயே இன்பமடைகிறவன். நான் பிரிவற்ற (பூர்ணமான) ஆனந்த ஸ்வரூபன். நான் அழிவில்லாத நான் தான்.

**ப்ரத்யக்-சைதந்ய-ரூபோ(அ)ஹம் சாந்தோ(அ)ஹம் ப்ரக்ருதே: பர: |**
**சாச்வதாநந்த3 ரூபோஹ-மஹமேவாஹ-மவ்யய: ||** 6

நான் உள்ளே விளங்கும் ஆத்ம சைதன்யஸ்வரூபி. நான் சாந்தன். பிரகிருதிக்கு (ஜகத்காரணமான மாயைக்கு) மேற்பட்டவன். நான் சாச்வதமான (உத்பத்தி விநாசமில்லாமல் எப்பொழுதும் இருக்கிற) ஆநந்த ஸ்வரூபன். நான் அழிவற்ற நான் தான்.

**தத்வாதீத: பராத்மா(அ)ஹம் மத்4யாதீத: பர: சிவ: |**
**மாயாதீத: பரம்ஜ்யோதி-ரஹமேவாஹ-மவ்யய: ||** 7

நான் (ப்ரக்ருதி முதலான) தத்வங்களுக்கு மேற்பட்டவன். மேலான ஆத்மஸ்வரூபம். இடைநிலைக்கு மேம்பட்டவன். மேலான சிவ (மங்கள) ஸ்வரூபம். மாயையைக் கடந்தவன். மேலான ப்ரகாசஸ்வரூபன். நான் அழிவற்ற நான் தான்.

**நாநா-ரூப-வ்யதீதோ(அ)ஹம் சிதா3காரோ(அ)ஹ-மச்யுத: |**
**ஸுகரூப-ஸ்வரூபோ(அ)ஹ-மஹமேவாஹ-மவ்யய: ||** 8

நான் பற்பல உருவங்களைக் கடந்தவன் (அல்லது நாம ரூபங்களற்றவன்), (ஆனாலும்) நான் சைதன்யத்தையே (ஞானத்தையே) வடிவமாகக் கொண்டவன். நழுவாதவன். நான் ஸுகரூபத்தையே ஸ்வரூபமாகக் கொண்டவன். நான் அழிவற்ற நான் தான்.

**மாயா-தத்கார்ய-தே3ஹாதி3 மம நாஸ்த்யேவ ஸர்வதா3 |**
**ஸ்வப்ரகாசைக ரூபோ(அ)ஹ-மஹமேவாஹ-மவ்யய: ||** 9

எனக்கு எப்பொழுதும் மாயையும், அதன் கார்யமான தேஹம் முதலியவையும் கிடையவே கிடையாது. நான், தானே ப்ரகாசிக்கும் (சைதன்யம்) ஒன்றையே ஸ்வரூபமாகக் கொண்டவன். நான் அழிவற்ற நான் தான்.

**கு3ணத்ரய வ்யதீதோ(அ)ஹம் ப்3ரஹ்மாதீ3நாம் ச ஸாக்ஷ்யஹம் |**
**அநந்தாநந்த3 ரூபோ(அ)ஹ-மஹமேவாஹ-மவ்யய: ||** 10

நான் (ஸத்வம். ரஜஸ், தமஸ்) என்னும் மூன்று குணங்களையும் தாண்டினவன் (நிர்க்குணன்.) நான் ப்ரஹ்மா முதலானவர்களுக்கும் ஸாக்ஷி. நான் எல்லையற்ற ஆனந்த ஸ்வரூபி. நான் அழிவற்ற நான் தான்.

**அந்தர்யாமி-ஸ்வரூபோ(அ)ஹம் கூடஸ்த[2]: ஸர்வகோ[3](அ)ஸ்ம்யஹம் |**
**பரமாத்மஸ்வரூபோஹ-மஹமேவாஹ-மவ்யய: ||** 11

நான் அந்தர்யாமி - (உள்ளேயிருந்து நியமம் செய்யும் ஆத்ம) ஸ்வரூபன். நான் (சலனமும், மாறுதலும் அற்ற) கூடஸ்தனாயும், எங்குமுள்ளவனாயும் இருக்கிறேன். நான் பரமாத்மஸ்வரூபன். நான் அழிவற்ற நான் தான்.

**நிஷ்கலோ(அ)ஹம் நிஷ்க்ரியோ(அ)ஹம் ஸர்வாத்மா(ஆ)த்[3]ய ஸநாதந: |**
**அபரோக்ஷ ஸ்வரூபோஹ-மஹமமேவாஹ-மவ்யய: ||** 12

நான் அவயவமில்லாதவன். நான் செய்கைகளற்றவன். எல்லா ஸ்வரூபமா யிருப்பவன். நான் பிரத்யக்ஷமாக அநுபவிக்கப்படும் ஸ்வரூபமாயிருப்பவன். நான் அழிவற்ற நான் தான்.

**த்[3]வந்த்[3]வாதி[3]-ஸாக்ஷி-ரூபோ(அ)ஹ-மசலோ(அ)ஹம் ஸநாதந: |**
**ஸர்வஸாக்ஷி-ஸ்வரூபோ(அ)ஹ-மஹமேவாஹ-மவ்யய: ||** 13

நான் (ஸுகம், துக்கம் முதலான) த்வந்த்வங்களின் ஸாக்ஷிஸ்வரூபன். (அதாவது த்வந்த்வங்களால் பாதிக்கப்படாமல் விலகியிருந்து காணும் ஆத்மா.) நான் அசைவற்றவன். எப்பொழுதுமிருப்பவன். அனைத்துக்கும் ஸாக்ஷியாம் வடிவினன். நான் அழிவற்ற நான்தான்.

**ப்ரஜ்ஞாநக[4]ந ஏவாஹம் விஜ்ஞானக[4]ந ஏவ ச |**
**அகர்த்தா(அ)ஹ-மபோ[4]க்தா(அ)ஹ-மஹமேவாஹ-மவ்யய: ||** 14

நான் அடர்ந்த பரஜ்ஞான ஸ்வரூபனே. அடர்ந்த விஜ்ஞான ஸ்வரூபந்தான். நான் செய்கிறவனல்ல. நான் அனுபவிக்கின்றவனல்ல. நான் அழிவற்றநானதான்.

**நிராதா[4]ர-ஸ்வரூபோ(அ)ஹம் ஸர்வதா[4]ரோ(அ)ஹமேவ ச |**
**ஆப்த-காம-ஸ்வரூபோ(அ)ஹ-மஹமேவாஹ-மவ்யய: ||** 15

நான் ஆதாரமில்லாத ஸ்வரூபம். நான் எல்லாவற்றிற்கும் ஆதாரமாக இருப்பவனுமாவேன். நான் எல்லா விருப்பங்களையும் அடைந்த ஸ்வரூபம். நான் அழிவற்ற நான்தான்.

**தாபத்ரய-விநிர்முக்தோ தே[3]ஹ-த்ரய-விலக்ஷண: |**
**அவஸ்தா[3]த்ரய-ஸாக்ஷ்யஸ்மி சாஹமேவாஹ-மவ்யய: ||** 16

நான் மூன்று தாபங்களிலிருந்து விடுபட்டவன். ஸ்தூலம், ஸூக்ஷ்மம், காரணம் என்ற மூன்று தேஹங்களைக் காட்டிலும் வேறுபட்டவன். (விழிப்பு, கனவு,

உறக்கம் என்ற) மூன்று அவஸ்தைகளுக்கும் ஸாக்ஷியாக இருக்கிறேன். (நான்) அழிவற்ற நான் தான்.

**த்³ருக்²-த்ருச்யௌ த்³வௌ பதா³ர்தௌ²ள ஸ்த:பரஸ்பர விலக்ஷணௌ |**
**த்³ருக்³-ப்³ரஹ்ம த்³ருச்யம் மாயேதி ஸர்வ வேதா³ந்த டி³ண்டி³ம: ||** 17

ஒன்றுக்கொன்று வேறுபட்ட தன்மையுள்ள த்ருக் (பார்ப்பது), த்ருச்யம் (பார்க்கப்படுவது) என்ற இரண்டு பதார்த்தங்கள் உள்ளன. (இவற்றில்) பார்ப்பது ப்ரஹ்மம், பார்க்கப்படுவது மாயை என்பதே எல்லா வேதாந்தங்களின் முரசறைதலாகும். (பார்ப்பது என்பது அறிவையும், பார்க்கப்படுவது என்பது அறியப் படுவதையும் குறிக்கும்.)

**அஹம் ஸாக்ஷதி யோ வித்³யாத் விவிச்யைவம் புந: புந: |**
**ஸ ஏவ முக்த: ஸந் வித்³வாநிதி வேதா³ந்த டி³ண்டி³ம: ||** 18

இவ்வாறு (ஆத்மாவை அநாத்மாவிலிருந்து) அடிக்கடி பிரித்து "நான் ஸாக்ஷியே", என்று எவன் அறிந்துகொள்கிறானோ, அந்த நல்ல ஞானிதான் முக்தன் என்பதே வேதாந்தங்களின் முரசறைதலாகும்.

**க⁴ட-குட்³யாதி³கம் ஸர்வம் ம்ருத்திகா-மாத்ரமேவ ச |**
**தத்³வத்³-ப்³ரஹ்ம ஜக³த் ஸர்வமிதி வேதாந்த டி³ண்டி³ம: ||** 19

குடம் சுவர், முதலியவை எல்லாம் மண்ணாக மட்டும் தான் உள்ளது. அதுபோல் பிரபஞ்சம் எல்லாம் ப்ரஹ்மம் என்பதே வேதாந்தங்களின் முரசறைதலாகும்.

**ப்³ரஹ்ம ஸத்யம் ஜக³ந்-மித்²யா ஜீவோ ப்³ரஹ்மைவ நாபர: |**
**அநேக வேத்³யம் ஸச்சா² ஸ்த்ரமிதி வேதா³ந்த டி³ண்டி³ம: ||** 20

ப்ரஹ்மமே ஸத்யமானது. பிரபஞ்சம் பொய்யானது*. ஜீவன் ப்ரஹ்மம்தான்; வேறு அல்ல. இந்த ரீதியாக அறியப்படுவதே சிறந்த சாஸ்திரம் என்பது வேதாந்தங்களின் முரசறைதலாகும்.

* 'மித்யை' என்பதைப் 'பொய்' எனும் போது அப்பட்டப் புளுகான அத்யந்த அஸத் என்று பொருள் கொள்ளக்கூடாது; யதார்த்த மாயையில் மெய் போலிருந்து ஞான நிலையில் பொய்யாக மறைந்துபோகிறது என்றே கொள்ள வேண்டும் என்பார் ஸ்ரீ காமகோடி ஸ்ரீசரணர்கள்.

**அந்தர்ஜ்யோதிர்-ப³ஹிர்ஜ்யோதி: ப்ரத்³யக்³ஜ்யோதி: பராத்பர: |**
**ஜ்யோதிர்-ஜ்யோதி: ஸ்வயம்-ஜ்யோதிராத்மஜோதி: சிவோஸ்ம்யஹம் ||** 21

நான் உள்ளே ப்ரகாசரூபன், வெளியிலும் ப்ரகாசரூபன், எல்லாவற்றிற்கும் மேலாக உள் நோக்கில் விளங்கும் ப்ரகாசரூபன். பிரகாசிக்கிற வஸ்துக்களுக்கும் பிரகாசம் கொடுக்கும் ஜ்யோதி. தானே பிரகாசிக்கும் ஜ்யோதி. ஜ்யோதிர் மயமான ஆத்மாவாக (சிவ மங்கள) ரூபனாக நான் இருக்கிறேன்.